1st March 1958]

### *'Kalainesan.'*

* 157 *Q.*—Sri S. VEDARATHNAM : Will the Hon. the Chief Minister be pleased to state whether the Government have considered the question of taking action against the Journal 'Kalainesan' for publishing news not to the good taste of general public?

The Hon. Sri C. SUBRAMANIAM : Yes, Sir.

Sri A. VEDARATHNAM : தலைவர் அவர்களே, கண்ணியமான மனிதர்களுடைய குடும்பங்களைப்பற்றி தவறான விஷயத்தை பிரசுரித்து அவர்களுக்கு இழிவைத்தேடும் பத்திரிகைகள், அதன் மூலம் பயமுறுத்தி பணம் வாங்குவதற்கும் உபயோகப்படுத்துகிற இம்மாதிரி பத்திரிகைகள் வராமல் இருப்பதற்கு அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுக்க முடியுமா ? அப்படியானால் என்ன நடவடிக்கை எடுக்கப்படும் ?

The Hon. Sri C. SUBRAMANIAM : இதற்கு முன்பு இருந்த பிரஸ் அப்ஜக்ஷனபிள் மாட்டர் பில் இருந்தது. இப்போது அந்த பில் நடப்பில் இல்லை. அதில் நடவடிக்கை எடுப்பதற்கு இடம் இருந்தது. இந்த சட்டத்தை கொண்டு வரவேண்டுமா என்பதைப்பற்றி ஆலோசனை செய்யப்பட்டு வருகிறது.

Sri K. R. NALLASIVAM : இது போன்ற பத்திரிகைகளைப்பற்றி பொது ஜனங்களிடமிருந்து விண்ணப்பங்கள் வருகிறதா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : விண்ணபங்கள் நிறைய வருகின்றன. அத்துடன் இப்பத்திரிகைகள் போலீஸ்காரர்களுடைய கவனத்திற்கு வரும்பொழுது அரசாங்கம் நடவடிக்கை எடுத்து வருகிறது.

Sri K. VINAYAKAM : Sir, is it a fact that this yellow journal indulges in cheap sex literature and obscene matters relating to film stars of our country?

The Hon. Sri C. SUBRAMANIAM : The hon. Member seems to be rightly informed. (Laughter.)

### *Industrial Estate, Guindy.*

* 160 *Q.*—P. G. MANICKAM : Will the Hon. the Minister for Industries be pleased to state the number of Harijans employed in the various factory units in the Industrial estates set up by the Government?

The Hon. Sri R. VENKATARAMAN : Eight Harijans in the private factory units and fifteen Harijans in the Government Units are employed up till now in the Industrial Estate at Guindy.

Sri P. G. MANICKAM : இத் தொழிற் பண்ணைகளில் ஹரிஜனங்களை ஒரு குறிப்பிட்ட அளவுக்காவது வேலைக்கு அமர்த்திக்கொள்ளவேண்டும் என்று கவர்ன்மெண்டார் ஏதாவது ஒரு உத்தரவு பிறப்பிப்பார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri R. VENKATARAMAN : அதற்கு அவசியமில்லை. இப்போது அவர்களுடைய எண்ணிக்கை கணிசமாக இருக்கிறது. சர்க்கார் நடத்துகிற எட்டு தொழிற்சாலைகளில் மொத்தம் 110 தொழிலாளர்கள் வேலை செய்து வருகிறார்கள். அதில் 15 பேர்கள் ஹரிஜனங்களாக இருக்கிறார்கள்.